மலர் 15 இதழ் 93

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7807

Phone No. 76190; 76191



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 14—12—74 சனி

வெளியீடு 15—12—74 ஞாயிறு



## தாண்டவராயன் விவகாரம்:

# குற்றச்சாட்டுகளுக்கு மந்திரி மாதவன் பதில்

## 'பர்மிட்' கொடுத்ததில் எந்தவிதத் தவறுமில்லை

சென்னை, டிச. 14— ரூ. 1½ கோடிக்கு அரிசி கடத்தல் சம்பந்தமாக கூறப்பட்ட புகார்களுக்கு இன்று அமைச்சர் மாதவன் சட்டசபையில் பதில் அளித்தார்.

தாண்டவராயன் என்பவருக்கு பர்மிட் கொடுத்ததில் எந்த விதத் தவறுமில்லை என்பதை ஆதாரத்துடன் விளக்கினார்.

இது குறித்து இன்று சட்டசபையில் அமைச்சர் பேசியதாவது:—

தஞ்சாவூரில் டி.சி.எம்.ஐ. என்ற ஒரு கூட்டுறவு நிறுவனம் உள்ளது. அவர்கள் லெவிமுறையில் நெல்லை கொள்முதல் செய்து வைத்திருந்தனர். அதில் அவர்களுக்கு நஷ்டம் ஏற்பட்டிருந்தது. அந்த நஷ்டத்தை ஈடுகட்ட வெளி மாநிலங்களுக்கு அதை விற்க வேண்டும் என்று அரசாங்கத்திடம் அனுமதி கோரியிருந்தார்கள்.

கலெக்டர் மூலமாக 'டெண்டர்' போட அரசு உத்தரவிட்டிருந்தது. அதன்பிறகு கலெக்டர் மூலம் கடந்த 1971-ம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் 'டெண்டர்' போடப்பட்டது. பலர் டெண்டர் கேட்டிருந்தார்கள். அதில் இந்தத்தாண்டவராயன் என்பவரும் ஒருவர்.

அதில் தாண்டவராயனுக்கு 'டெண்டர்' கிடைக்கவில்லை.

அடுத்து பிப்ரவரி மாதம் 2வது டெண்டர் விடப்பட்டது. அதிலும் தாண்டவராயன் 'டெண்டர்' கேட்டிருந்தார். அப்போதும் தாண்டவராயனுக்கு 'டெண்டர்' கிடைக்கவில்லை.

மூன்றுவது முறையாக மார்ச் மாதம் விடப்பட்ட டெண்டரிலும் தாண்டவராயன் 'டெண்டர்' கேட்டிருந்தார். அப்போதும் அவருக்கும் 'டெண்டர்' கிடைக்கவில்லை.

கடைசியாக தாண்டவராயன் அரசுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

அந்தக் கடிதத்தில், யார் அதிகமாக இந்தமுறை டெண்டர் கேட்டிருக்கிறார்களோ, அதைவிட அதிகமான தொகைக்கு, தாம அந்த நெல்லை வாங்கிக்கொள்வதாக அறிவித்திருந்தார். அதனால் அவருக்கு அந்த நெல்லை வெளி மாநிலத்திற்கு அனுப்ப பர்மிட் வழங்கப்பட்டது. இதுதான் நடந்தது. இதில் அரசு எந்தத் தவறும் செய்துவிடவில்லை.

ஆனால் அந்த 'பர்மிட்'டை பயன்படுத்தி, அந்த நெல் தவிர வேறு நெல்லையும் அவர் வெளி மாநிலத்திற்கு கடத்த முயன்றிருக்கிறார்.

இதை நமது மாநிலப்போலீசார் கண்டுபிடித்தனர்.

அதைக் கண்டுபிடித்தபோது தாண்டவராயனின் பணம் ரூ. 4 லட்சம் அரசாங்கத்திடம் இருந்தது. அதைத் தராமல் நிறுத்தி வைத்துவிட்டோம்.

மேலும் 125 டன் நெல்லையும் ஒரு லட்சம் ரூபாயையும் நாம் அவரிடம் இருந்து பிடித்து வைத்திருந்தோம. திருட்டுத்தனமாகக் கடத்த முயன்ற நெல்லையும் பறிமுதல் செய்துவிட்டோம.

'பர்மிட்'டைத் தவறாகப் பயன்படுத்தியதாக அவர்மீது வழக்குத் தொடர்ந்திருக்கிறோம். இதுதான் நடந்தது இதில் என்ன தவறு இருக்கிறது?

இவ்வாறு அமைச்சர் மாதவன் கூறினார்.

## பிரமாண்ட ஏற்பாடு: கருணாநிதி பேசுகிறார்

சென்னை, டிச. 14—தி. மு. கழக பொதுக்குழு விளக்கப் பொதுக்கூட்டம் தியாகராய நகர் பனகல்பார்க் அருகில் நாளை (ஞாயிறு) இரவு 6 மணிக்கு நடக்கிறது. பொதுக்குழு நடந்து முடிந்தபின் சென்னையில் நடக்கும் முதல் பொதுக்கூட்டமான இதில் முதல்வர் கருணாநிதி கலந்து கொண்டு பேசுகிறார். இதற்காக ஒருசின்ன மாநாடு போல் சிறப்பான ஏற்பாடுகள் பிரமாண்டமான முறையில் செய்யப்படுகின்றன.

பாண்டி பஜார், பனகல் பார்க் சுற்றிலும் உள்ள மரங்களில் மின் விளக்குகளால் மகர்த்து கொத்தாக அலங்காரம் செய்யப்பட்டுள்ளது.

பொதுக் கூட்ட மேடை உயரமாக அலங்காரமாக அமைக்கப்பட்டுள்ளது.

முதலமைச்சர் கருணாநிதி தேனாம்பேட்டை ஆலயம்மன் திடலில் அண்ணா சிலையைத் திறந்து வைக்கிறார். அங்கு அவர் வந்தவுடன் யானை ஒன்று மாலை போட்டு வரவேற்கிறது.

அங்கிருந்து ஊர்வலமாக பொதுக்கூட்டம் நடக்கும் பனகல் பூங்காவிற்கு கருணாநிதி ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவார்.

சிவகங்கை சேதுராமன் பலகுரல் கலைநிகழ்ச்சிநடக்கிறது.

பொதுமக்கள் கூட்டம் முடிந்து திரும்ப எல்லா வழிகளுக்கும் பஸ் வசதி செய்யப்பட்டுள்ளது.

## 'பைல்' விவகாரம்; அ.தி.மு.க. புகார்: வ.கம்யூ மறுப்பு

சென்னை, டிச. 14—பைல் விவகாரம் பற்றி அமைச்சர் மாதவன் அளித்த விளக்கத்துக்குப் பிறகு சுமார் அரை மணி நேரம் அதிமுக இந்திரா காங்கிரஸ், பழையகாங்கிரஸ் வலது கம்யூனிஸ்டு உறுப்பினர்கள் பல கேள்விகளைக் கேட்டனர்.

அமைச்சர் மாதவன் அவற்றுக்குப் பதிலளித்தார்.

பெ சீனிவாசன் (அதிமுக) பேசுகையில் இங்கே பைலை பார்க்க அனுமதித்தார்கள். மதிப்பீட்டுக்குழு கேட்டபோது ஏன் கொடுக்கவில்லை. அதன் பிறகு அந்த பைலில் சாதகமான விவகாரம்முளைத்திருக்கிறது. பைல் ரிப்பேர் செய்யப்பட்டிருக்கிறது இது உண்மையான பைல் அல்ல தயாரிக்கப்பட்டபைல். போலி பைல்'' என்றார்.

பின்னர் தங்கமணி (வ.கம்) பேசுகையில் ''எல்லோரும் பைலை பார்த்தோம். பைல் எல்லாம் ஒரிஜினல் பைல் தான்'' என்று கூறினார்.

## எதிர்க்கட்சியினர் புகாருக்கு

## தி. மு. க. பதில்:

# பிரச்னையை விட்டு நாங்கள் விலகிச் சென்று விடவில்லை'

சென்னை, டிச. 14—பிரச்சினையை விட்டு நாங்கள் (தி. மு. க. அரசு) விலகிச் சென்று விடவில்லை. மக்கள்சரியாகவே இருக்கிறார்கள் என்று தி. மு. கழக எம் எல் ஏ. காவேரி மணியம் இன்று சட்டசபையில் கூறினார்.

தி. மு. க. அரசு மீது கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது இன்று 2-வது நாளாக விவாதம் நடைபெற்றது.

அதில் கலந்து கொண்டு காவேரி மணியம் எம்.எல்.ஏ. பேசியதாவது:—

''இந்த அரசு மீது மக்களுக்கு நம்பிக்கை இல்லை என்று கூறி மக்களுக்கு எதிர்க்கட்சி மீது உள்ள நம்பிக்கையை இழந்து விடாதீர்கள் என்று எதிர்க்கட்சியினரை கேட்டுக் கொள்கிறேன்

நாட்டில் ஏற்பட்டிருக்கின்ற வறட்சியை இந்த அரசு நன்கு உணர்ந்து திட்டங்களைத் தீட்டி வருகிறது.

உணவு நிலைமை குறித்து ஆராய எங்கள் செயற்குழு, பொதுக்குழு உடனடியாகக் கூட்டப்பட்டது. இதிலிருந்து நாங்கள் பிரச்னைகளை விட்டு விலகிச் செல்லவில்லை என்பது தெரியவில்லையா?

கழகம்மக்கள் நம்பிக்கையை இழந்துவிட்டது என்று எதிர்க்கட்சிகள் கூறுகின்றன.

கடந்த 8-ம்தேதி மதுரையில் நடைபெற்ற ஊர்வலத்தைப் பார்த்திருந்தால் இப்படிச் சொல்லமாட்டார்கள்.

நாட்டிலே கடும் வறட்சி ஏற்பட்டிருந்தும் அவ்வளவு பெரிய மக்கள் கூட்டம் மதுரையில் கூடியிருந்தது என்றால் பிரச்னை எங்கே இருக்கிறது என்பதை மக்கள் சரியாக உணர்ந்து விட்டார்கள் என்பது தெளிவாகிவிட்டது. ஆகையால் மக்களுக்கு இந்த அரசு மீது நம்பிக்கையுள்ளது என்பதுடன் எதிர்க்கட்சியாக உள்ள நீங்கள் மக்களின் நம்பிக்கையை இழக்கவேண்டாம். என்று கேட்டுக்கொள்கிறேன்

இவ்வாறு காவேரி மணியம் பேசினார்.

## சென்னை நகரில்

# பால் விலை உயர்வுக்கு இடைக்கால தடை: கோர்ட் உத்தரவு

சென்னை, டிச. 14—சென்னை நகரில் இந்த மாதம் 16-ந் தேதியிலிருந்து அமுலுக்கு வரவேண்டிய பால் விலை உயர்வுக்கு கோர்ட்டில் இடைக்கால தடை உத்தரவு போடப்பட்டுள்ளது.

சென்னை நகரில் தமிழ்நாடு பால் வள நிறுவனம், இப்போது பொதுமக்களுக்கு விற்பனை செய்துவரும் பதப்படுத்தப்பட்ட பால் விலை லிட்டருக்கு ஒரு ரூபாய் 40 காசு வீதம் உள்ளது. வருகிற 16-ந் தேதியில் இருந்து இந்த விலை ஒரு ரூபாய் 80 காசுஆக உயர்த்தப்படுகிறது.

இந்த பால் விலை உயர்வை எதிர்த்து சென்னை நகர 6-வது சிவில் கோர்ட்டில் அகில இந்திய உபயோகிப்போர் கவுன்சில் தமிழ்நாடு கிளையின் செயலாளர் வி. பி. குமாரவேலு ஒரு வழக்கு போட்டிருக்கிறார். அவர் தமது மனுவில்தெரிவித்துள்ளதாவது:—

லிட்டருக்கு 40 காசு வீதம் பால்விலைஉயர்த்தப்பட்டுள்ளதற்கு போக்குவரத்து செலவு உயர்ந்துள்ளதே காரணம் என்று கூறப்பட்டுள்ளது. அது, பால் வள நிறுவனத்தின் திறமைக் குறைவை குறிக்கிறது.

அந்த நிறுவனத்திற்கு சொந்தமாக லாரிகளும், மோட்டார் வண்டிகளும் இருக்கும்போது இப்படி பால் விலை உயர்த்துவது சரியல்ல.

கொள்முதலுக்கும் விற்பனைக்கும் தொடர்பு இருப்பதாக இந்த விலை உயர்வு இல்லை.

இந்த விலை உயர்வு சட்ட விரோதமானது.

இந்த விலை உயர்வு பொது மக்களின் நலனைப் பாதிக்கிறது. ஆகவே விலை உயர்வை ரத்து செய்யவேண்டும் என்று மனுவில் கோரப்பட்டுள்ளது.

### தடை உத்தரவு

நீதிபதி நேமிநாதன் இந்த மனுவை விசாரணைக்கு ஏற்றுக்கொண்டார். டிசம்பர் 16-ந் தேதியிலிருந்து அமுலுக்கு வருவதாயிருக்கிற பால்விலை உயர்வுக்கு இடைக்கால தடை விதித்து நீதிபதி உத்தரவு பிறப்பித்தார்.

மறு விசாரணை ஜனவரி 30-ந் தேதிக்கு தள்ளிப் போடப்பட்டது.

## சிறையில் போரூர் தொழிலாளர்கள் உண்ணாவிரதம்

சென்னை, டிச. 14—நேற்றைய போராட்டத்தில் கைது செய்யப்பட்ட போரூர் டபிள்யூ எஸ. இன்சுலேட்டர்ஸ நிறுவனத்தின் தொழிலாளர்கள் 32 பேர் இன்று இரண்டாவது நாளாக சென்னை மத்திய சிறையில் உண்ணாவிரதம் இருந்து வருகிறார்கள்.

கோட்டை எதிரே உண்ணாவிரதக் கிளர்ச்சி நடத்துவதற்காக அந்த நிறுவனத்தின் தொழிலாளர்கள் இன்றும் தொடர்ந்து கடற்கரை உழைப்பாளர் சிலை அருகே தடை உத்தரவை மீறி போராட்டம் நடத்தினர்கள் இன்றைய போராட்டத்தில் 25 பேர் கைது செய்யப்பட்டனர். அவர்களும் சிறையில் உண்ணாவிரதம்இருப்பார்கள்.

## ப. காங்கிரஸ் எம். எல். ஏ. பேச்சு

# சட்டசபையை கலைத்து தேர்தல் நடத்த கோரிக்கை

சென்னை, டிச. 14—தமிழக சட்டசபையைக் கலைத்து தேர்தல் நடத்த வேண்டும் என்று சட்டசபையில் இன்று பழைய காங்கிரஸ் உறுப்பினர் ஜேம்ஸ் வற்புறுத்தினார். அப்படிச் செய்யாவிட்டால் முதல்வர் அறையை கேரோ செய்யக்கூடிய நிலை எங்களுக்கு ஏற்படும் என்றும் அவர் கூறினார்.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின்மீது இன்று நடந்த விவாதத்தில் ஜேம்ஸ் பேசுகையில் இவ்வாறு கூறினார்.

ஜேம்ஸ் (பழைய காங்கிரஸ்): இங்கே முதலமைச்சர் தனக்குப் பின்னால் 169 உறுப்பினர்கள் இருக்கிறார்கள் என்று கருதலாம். இதற்கு முன்னர் இப்படி நம்பிக்கையில்லாத் தீர்மானம் வந்ததில்லையா என்றும் நினைக்கலாம்.

இதற்கு முன்னர் வந்ததற்கும் இப்போது வந்துள்ள நம்பிக்கையில்லா தீர்மானத்துக்கும் வித்தியாசம் உள்ளது.

### தேர்தல் நடத்துக

இப்போது அரிசிப்பிரச்னை மிக முக்கியமாம பிரச்சினையாக உள்ளது.

நாலரைகோடிமக்களுக்கும் முதலமைச்சர் செய்யவேண்டிய சிறந்த சேவை இந்த சட்டசபையை கலைத்துவிட்டு மக்களைச் சந்திக்கவேண்டும் என்பதுதான். 1971-ல் செய்ததுபோல இப்போதும் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். உங்களுக்கு ஆதரவு இருப்பதாக நினைத்து மீண்டும் ஆட்சிக்கு வரலாம் என்று கருதினால், மக்கள் உங்களை அனுமதிக்க மாட்டார்கள்.

### கேரோ

நீங்கள் அப்படி செய்யாமல் இருந்தால், நீங்கள் இருக்கும் அறையைக் கூட ''கேரோ'' செய்யக் கூடிய நிலை எங்களுக்கு ஏற்படும்.

1967-ல் நீங்கள் ஆட்சிக்கு வந்தபோது படி அரிசி போட்டீர்கள் 'அண்ணா அரிசி' ''எம். ஜி. ஆர். அரிசி'' என்றெல்லாம் போட்டீர்கள். ஆனால் இன்னும் கொஞ்ச நாள் போனால் படி அரிசி 15 ரூபாயாகக்கூட ஆகிவிடும்.

இவ்வாறு ஜேம்ஸ் கூறினார்.

## கடத்தல் அரிசியுடன் கார் பறிமுதல்

சென்னை, டிச. 14—சென்னைக்கு அரிசி கடத்த முயற்சித்த காரையும், அதில் இருந்த ரூ. 5000 பெறுமான அரிசியையும் அதிகாரிகள் கைப்பற்றியுள்ளனர்

இச்சம்பவம் வண்டலூரில் நடந்தது.

சென்னையை நோக்கி வந்து கொண்டிருந்த அக் காரை வண்டலூர் சோதனை சாவடியைச் சேர்ந்த துணை தாசில்தார் ஏ. ஜே. வெங்கட்ராமனும் சிப்பந்திகளும் தங்களுடைய ஜீப்பில் 5 கிலோ மீட்டர் தூரம் துரத்திச் சென்றனர்.

கடைசியில் காரில் இருந்தவர்கள் காரை நிறுத்திவிட்டு தப்பி ஓடினர். அதிகாரிகள் அந்த அம்பாசிடர் காரையும் அதில் இருந்த அரிசியையும் கைப்பற்றினர்.

# உயர்நீதி மன்ற நீதிபதிகளுக்கு குடும்ப பென்ஷன் திட்டம்

புதுடெல்லி டிச. 14— சுப்ரீம் கோர்ட், உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்கு குடும்பப்பென்ஷன் மற்றும் சில புதிய சலுகைகள் அளிக்கும் சர்வீஸ் நிலவரம் பற்றிய சட்டத்திருத்தம் நாடாளுமன்றக் கூட்டத்தொடரில் வரும்.

மத்திய மந்திரி சபை இவ்வாறு முடிவு செய்துள்ளது.

அளிக்கப்படும் சலுகைகள் மூன்றின் விவரம் வருமாறு:-

நீதிபதிகளுக்கு குடும்பப் பென்ஷன் திட்டம் அமுல் படுத்தப்படும். இதற்காக அவர்கள் ரூ 5 ஆயிரம பணம் கட்டவேண்டும்.

வாடகை இல்லாத வீட்டு வசதி அளிக்கப்படும். அல்லது சம்பளத்தில் 12·5 சதவிகிதம் வாடகைப் படியாகத் தரப்படும்.

மாதம் ரூ. 300 கார் படியாகத் தரப்படும்.

அரசியல் சாசனத்தின் விதிப்படி ஒரு சுப்ரீம் கோர்ட் நீதிபதி ரூ. 4ஆயிரமும், உயர் நீதிமன்ற நீதிபதி ரூ. 3,500ம் ஊதியமாகப் பெறுகிறார்கள்.

# நகரசபைத் தேர்தல்: எம். ஜி. ஆர். அறிவிப்பும் அ.தி.மு.க.வினர் குழப்பமும்

**சென்னை, டிச. 14—வருகிற நகரசபைத் தேர்தலில் அ. தி. மு. க. போட்டியிடுவது பற்றி எம். ஜி. ஆர். அறிவித்த அறிவிப்பு அ. தி. மு. க. வினருக்கே பெரும் குழப்பத்தை ஏற்படுத்தியுள்ளது.**

நகரசபைத் தேர்தலில் அ தி மு க போட்டியிடாது. அ. தி. மு. க.வைச் சேர்ந்தவர்கள் கட்சி சார்பற்ற முறையில்தான் போட்டியிட வேண்டும் என்று எம். ஜி. ஆர். அறிவித்திருக்கிறார்.

இப்படிக் கூறிய எம்ஜிஆர், "கட்சி சார்பு இல்லாமல் போட்டி என்றவுடன், அ. தி. மு. க.வினர் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் போட்டியிடலாம் என்ற நிலையும் கூடாது. அ.தி.மு.க. மேல் அமைப்புக்களின் அனுமதி பெற்று யாரேனும் ஒருவர்தான் போட்டியிட வேண்டும்" என்றும் குறிப்பிட்டிருக்கிறார். இது முன்னுக்குப்பின் முரண்பாடாக உள்ளதால், அ. தி. மு. க.வினரும் குழப்பம் அடைந்துள்ளனர்.

இது குறித்து சென்னையை அடுத்த தென்குன்றத்தில் நடந்த அ. தி. மு. க. சிறப்புக் கூட்டத்தில் எம். ஜி. ஆர். பேசியதாவது:—

சட்டசபை என்பது, சட்டங்களை உருவாக்கும் இடம். ஆனால் நகரசபைகள், சட்டசபைகள் நிறைவேற்றிய சட்டங்களை நிறைவேற்றும் இடம்.

சட்டங்களை உருவாக்கும் இடத்தில் மட்டும் கட்சி அரசியல் வைத்துக்கொள்வோம். நகரசபைகளில் கட்சி அரசியல் வேண்டாம்.

நான் உறுதியாக சொல்கிறேன். நகரசபை தேர்தலில் அ.தி.மு.க. போட்டியிடாது. அ.தி.மு.வை சேர்ந்தவர்கள் கட்சி சார்பற்ற முறையில் போட்டியிடுவார்கள்.

## ஒருவர்தான் போட்டியிட வேண்டும்

கட்சி சார்பு இல்லாமல் போட்டி என்றவுடன் அ. தி. மு.க. தோழர்களே ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் போட்டியிடலாம் என்ற நிலையும் கூடாது. அ.தி.மு.க. மேல் அமைப்புகளின் அனுமதி பெற்று, யாரேனும் ஒருவர்தான் போட்டியிட வேண்டும்.

போட்டியிட வாய்ப்பு கோருவதில் போட்டி இருந்தாலும் இறுதியில் கட்டுப்பாடு உணர்வோடு ஒத்துழைப்பவர்கள் தான் எங்கள் கட்சி தோழர்கள்.

அந்த தோழர்களின் மன உறுதியை நம்பி அறிவிக்கிறேன், நகரசபை தேர்தலில் கட்சி சார்பாக அ தி முக போட்டியிடாது.

இவ்வாறு எம் ஜி ஆர் கூறினார்.

## பெண்களை காக்க எம்ஜிஆரின் புதிய படை

சென்னை, டிச. 14—எம். ஜி. ஆர். அமைக்க இருக்கும் ஜனநாயகப் பாதுகாப்பு அணிக்கு "தியாகப்படை" என்று பெயரிட வேண்டும் என்று எம். ஜி. ஆர். கூறினார்.

இது குறிப்பாக பெண்களின் கற்பைக் காக்கும் வேலைகளைச் செய்யும் என்றும் அவர் அறிவித்தார்.

செங்குன்றம் கூட்டத்தில் இது குறித்து அவர் கூறியதாவது:—

ஜனநாயகப் பாதுகாப்பு அணி வெறும் பிரச்சாரம் அல்ல. தொண்டர் படை. அக்கிரமத்தை கண்டிக்கும் படை. சிறை செல்லத் தயாராக உள்ளபடை, வறட்சியை போக்க உழைக்க வேண்டும். வன்முறை தோன்றுவண்ணம் காக்க வேண்டும். பெண்கள் கற்பைப் பாதுகாக்கும் படை. இந்தப் படைக்குத் "தியாகப் படை" என்று பெயரிடப்பட வேண்டும்.

இவ்வாறு எம். ஜி. ஆர். கூறினார்.

## பழைய காங்கிரஸ் உண்ணுவிரத கிளர்ச்சி

சென்னை, டிச. 14—சென்னை 60-வது வட்டத்தில் புரசவாக்கம் நெடுஞ்சாலையில் வருகிற ஞாயிற்றுக்கிழமை விலை உயர்வு கண்டன உண்ணுவிரத கிளர்ச்சி நடத்தப்படும் அருளானந்தம் தலைமையில் பழைய காங்கிரஸ ஊழியர்கள் அன்று காலை 6 மணியில் இருந்து மாலை 6 மணிவரை உண்ணுவிரதம் நடத்துவார்கள்.

*மக்கள் எழுச்சி மாநாட்டில் பேசுகிறார்:*

## தமிழ்நாட்டில் ஜெயபிரகாசர்

**சென்னை, டிச. 14—சர்வோதய இயக்கத் தலைவர் ஜெயபிரகாஷ் நாராயணன் தமிழ்நாட்டுக்கு வருகிறார்.**

திருச்சியில் நடைபெறும் மக்கள் எழுச்சி மாநாட்டில் கலந்துகொண்டு பேசுகிறார்.

பிப்ரவரி 4, 5 தேதிகளில் வேலூர் சி எம் சி ஆஸ்பத்திரியில் தங்கி, உடல் பரிசோதனை செய்துகொள்வார்.

6-ந்தேதி திருச்சிக்கு சென்று அங்கு நடைபெறும் 'மக்கள் எழுச்சி மாநாட்டில் கலந்து கொள்வார்.

இந்தத் தகவல்களை திருச்சி மாவட்ட சர்வோதய மண்டல் காரியதரிசி சுப்பிரமணியம் திருச்சியில்நிருபர்களிடம் தெரிவித்தார்.

## கற்பழிப்பு: அ.தி.மு.க. பிரமுகர் கைது

நாகை, டிச. 14—போலீஸ்காரர் ஒருவரின் மனைவியை நள்ளிரவில் வீடு புகுந்து கற்பழிக்க முயன்ற அ. தி. மு. க. பிரமுகர் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

இது பற்றிய விவரம் வருமாறு:

நாகப்பட்டினம் போலீஸ் நிலையத்தில் போலீஸ்காரராக பணிபுரிபவர் மாரிமுத்து. இவர் நாகப்பட்டினத்தை அடுத்த வாய்மேடு என்ற இடத்தில் வசித்து வருகிறார்.

சம்பவத்தன்று மாரிமுத்து வேலைக்குச் சென்றுவிட்டார். அவரது மனைவி தனியாக வீட்டில் தூங்கிக்கொண்டிருந்தார்.

நள்ளிரவு 2 மணிக்கு அந்த வீட்டுக்குள் புகுந்த அதிமுக பிரமுகர் சிவசுப்பிரமணியம் தூங்கிக் - கொண்டிருந்த போலீஸ்காரரின் மனைவியிடம் வம்பு செய்ய முயன்றாராம்.

தனியாகச் சிக்கிக்கொண்டதை உணர்ந்த அந்தப்பெண் சாதுரியமாக கதவை திறந்து கொண்டு தலைதெறிக்க ஓடியிருக்கிறார். அப்போதும் சிவசுப்பிரமணியம் விடாமல் விரட்டிக்கொண்டே சென்றாராம்.

### கூச்சல்

இதைக் கண்ட போலீஸ்காரரின் மனைவி பலமாகக் கத்தி கூப்பாடு போட்டிருக்கிறார். இந்த அலறலைக்கேட்டு பொதுமக்கள் அங்கே வந்து கூடிவிட்டனர். அருகிலிருந்த போலீஸ் நிலையத்திலிருந்து சர்க்கிள் இன்ஸ்பெக்டரும். மற்றும் போலீசாரும் ஓடி வந்து அந்தப் பெண்ணைக் காப்பாற்றினார்கள்.

பிறகு சிவசுப்பிரமணியத்தைப் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கைது செய்தார்.

## ரூ. 5 கோடி உதவி: இந்திராவிடம் தமிழக எம்.பி.க்கள் கோரிக்கை

**புதுடெல்லி, டிச. 14—தமிழ்நாட்டைச் சேர்ந்த எம். பி.க்கள் தூதுக்குழு ஒன்று நேற்று டெல்லியில் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்துப் பேசியது.**

பார்வதி கிருஷ்ணன், கே. கோபால், ஜெயலட்சுமி. காத்தமுத்து, செல்லசாமி ஆகியோர் அந்தக் குழுவில் அடங்கியிருந்தனர்.

தமிழ்நாட்டில் கடுமையான வறட்சி ஏற்பட்டுள்ளதால், வறட்சி நிவாரணத்திற்காக 5 கோடி ரூபாய் நிதி உதவி அளிக்க மத்திய அரசு முன்வரவேண்டும் என்று பிரதமரிடம் அவர்கள் கேட்டுக் கொண்டனர்.

ராமநாதபுரம் மாவட்டம் பூராவிலும் மற்றும் திருநெல்வேலி, மதுரை, திருச்சி, சேலம், கோவை, தர்மபுரி மாவட்டங்களின் சில பகுதிகளிலும் வறட்சி நிலைமை மிகக் கடுமையாக உள்ளதாக பிரதமரிடம் அவர்கள் விளக்கினார்கள்.

அந்தப் பகுதியிலிருந்து விவசாயிகள், தங்கள் ஆடு, மாடுகளுடன் வெளியேறி மற்ற ஊர்களுக்குப் போய் குடியேற ஆரம்பித்துவிட்டதாகவும் 40 சதவிகித மின்சார வெட்டு அமுலுக்கு வந்துள்ளதைத் தொடர்ந்து நிலைமை மேலும் மோசம் அடைந்துவிட்டது என்றும் அவர்கள் எடுத்துக் கூறினார்கள்.

வறட்சி நிவாரணப் பணிகளுக்காக தமிழ்நாடுஅரசுக்கு 5 கோடி ரூபாய் நிதி உதவி அளிக்க மத்திய அரசு முன்வரவேண்டும் என்று அவர்கள் கோரினார்கள். பிரதம மந்திரியின் நிவாரண நிதியிலிருந்தும் தமிழநாட்டுக்கு நன்கொடை வழங்கப்படவேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தினார்கள்.

## வயல் அருகில் பெண்ணின் பிணம்

காஞ்சிபுரம், டிச. 14—வயல் அருகில் இங்கு முனியம்மாள் என்ற பெண்ணின் பிணம் கிடந்தது. உடலில் காயங்கள் காணப்பட்டன.

இது கொலையாக இருக்கலாம் என்று போலீசார் சந்தேகிக்கின்றனர். சடலம் பிரேத பரிசோதனைக்கு ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைக்கப் பட்டது.

*மசானி தகவல்*

## ரூ. 4500 கோடிக்கு உணவு இறக்குமதி

சென்னை, டிச. 14—கடந்த 15 ஆண்டுகளில் இந்தியா ரூ. 4500 கோடி மதிப்புக்கு 9 கோடி டன் உணவுத் தானியங்களை இறக்குமதி செய்துள்ளது உணவு உற்பத்தியைப் பெருக்க அரசு சரியாகத் திட்டமிட்டு செயல்படவில்லை என்பதை இது காட்டுகிறது என்று சுதந்திரா கட்சித் தலைவர் எம். ஆர். மசானி கூறினார்.

சென்னை கோகலே மண்டபத்தில் "சுதந்திர பாதுகாப்பு இரு வார விழா"வையொட்டி நடந்த கூட்டத்தில் பேசுகையில் அவர் இவ்வாறு கூறினார்.

"அடுத்த ஆண்டில் உணவு நிலைமை பயங்கரமாகி லட்சக்கணக்கான மக்கள் மடியலாம் என்று பொருளாதார நிபுணர்கள் கருதுகின்றனர்" என்று மசானி சொன்னார்.

"உருக்கு, கனரக என்ஜினிரிங் ஆலைகளில் அரசு பெரும் பணத்தை வீணடித்துள்ளது. அதே நேரத்தில் விவசாயத்தைப் புறக்கணித்துவிட்டது" என்று மசானி குற்றம்சாட்டினார்.

## 1 வருடம் வினோபா மௌன விரதம்

பௌனார், டிச. 14— இம்மாதம் 24-ம் தேதி முதல் ஒரு ஆண்டுகாலம் வினோபா மௌன விரதம் இருக்கிறார்.

இந்தத் தகவலை பிரார்த்தனைக் கூட்டம் ஒன்றில் அவர் தெரிவித்தார்.

"மௌன விரதம் இருக்கும் சமயத்தில் யாருடனும் பேசவோ, எழுதவோ மாட்டேன். ஆனால், முக்கியமான செய்திகளை மட்டும் தெரிந்து வைத்துக்கொள்வேன். நோய்வாய்ப்பட்டால் டாக்டர்கள் கேட்கும் கேள்விகளுக்கு சுருக்கமாக பதில் அளிப்பேன்" என்று அவர் கூறினார்.

ஆன்மீக காரணங்களினால் அவர் மவுனவிரதம் இருப்பதாகவும் கூறினார்.

# ரேஸ் செய்தி

## 2000 கினி ரேசில் கடும் போட்டி

**சென்னை, டிச. 14—நாளையதின ரேசில் தென்னிந்திய 2000 கினி ரேஸ் மிக முக்கியமானது. இதில் வெற்றி பெற 'ஹாப்"எ"கிரவுன்' குதிரைக்கு நல்ல வாய்ப்புள்ளது.**

இக்குதிரை ஹைதராபாத் டெக்கான் டெர்பி ரேசில் வெற்றி பெற்றதாகும். பெங்களூரில் ஒரு முக்கிய ரேசில் இரண்டாவதாக வந்தது. இப்போது இக்குதிரை நல்ல தரத்தில் உள்ளது.

டிங் ஏ லிங் குதிரை இப்போது முன்னைவிட மிகவும் முன்சனறியிருக்கிறது. எனவே இது கடும் போட்டியை அளிக்கும்.

"அம்பர்டியூ" குதிரை மேற்படி இரு குதிரைகளையும் சமாளித்து எதிர்பாராமல் வெற்றி பெறவும் வாய்ப்பு உள்ளது.

### அசுவகோஷ் டிப்ஸ்

1. பியட்டாஸ் பிரைட்
2. ரிவர் போர்ட்
3. ஹேப்பி மிலன்
4. ஹாப் எ கிரவுன்
5. சுந்தர்பன்ஸ்
6. தி பியூரர்
7. பதங்

**1. பரோடா பிளேட்**
1600 மீட்டர் 1-45 மணி

1 பியட்டர்ஸ் பிரைட் 60-00 எஸ். மார்ஷல்—2
2 கோல்டன் ஆர்ட் 57-50 மக்கோவன்—1

டிப்ஸ்:
1. பியட்டாஸ் பிரைட்

**2. ரேஸ் கிளப் கப்**
2400 மீட்டர் 2-45 மணி

1 ரிவர்போர்ட் 60-00 கெட்டில்—4
2 லக்கி ஸ்காட் 59-50 ஹவுட்—3
3 குளோரி ஆப் கங்கா 56-50 கஸ்ட்—1
4 ஸ்மைலிங் பிரின்சஸ் 56-00 எஸ். மார்ஷல்—2

டிப்ஸ்
1 ஸ்மைலிங் பிரின்சஸ்
2 ரிவர் போர்ட்

**3. மதுரை பிளேட்**
1000 மீட்டர் 3-00 மணி

1 செலி பிரேஷன்ஸ் எஸ் மார்ஷல்—6 54-00
2 வாரியர்ஸ கால் ஹவுட்—9 54-00
3 மகானு கரன்சிங்—5 54-00
4 ஹேப்பிமிலன் கஸ்ட்—1 54-00
5 டுவிக்கி 52-50 கெட்டில்—8
6 ராயல் பிரின்சஸ் 52-50 எல். மார்ஷல்—7
7 ஐரிஷ் மிஸ்ட் 52-50 பிகரடோ—3
8 ரெட் ஸ்டிரீக் 52-50 ரோச்—2
9 சில்லிசிர் 52-50 மக்கோவன்—4

டிப்ஸ்:
1. செலிபிரேஷன்ஸ்
2. ஹேப்பி மிலன்
3. வாரியர்ஸ் கால்

எதிர்பாராத வெற்றி: ரெட் ஸ்டிரீக்

**4. தென்னிந்திய 2000 கினி**
1600 மீட்டர் 3. 35 மணி

1 அம்பர் டியூ 56-00 ஸ்பின்பர்ன்—5
2. ஹாப் எ கிரவுன் 56-00 கெட்டில்—2
3. பேர் டிங்கும் 56-00 கரன்சிங்—4
4 லாஸ் பால்மாஸ் 56-00 ஹவுட்—1
5. சிஷ்யா 56-00 மக்கோவன்—6
6. டிங் எ லிங் 56-00 ரோச்—3

டிப்ஸ்
1. ஹாப் எ கிரவுன்
2. டிங் எ லிங்

எதிர்பாராத வெற்றி: அம்பர் டியூ

**5. கொச்சின் பிளேட்**
1200 மீட்டர் 4-10 மணி

1 மூன் பிளவர் 61-00 நியூமன்—8
2 ஆப்பிள் டுவிஸ்ட் 61-00 ரோச்—9
3 டால்கிங் 57-00 புஞசா—10
4 பிரைரி பிளவர் 56-00 எஸ். மார்ஷல்—2
5 டியர் எடித் 54-00 உமேஷ்—6
6 நயா கீத் 53-00 பிகரடோ—5
7 பெல்வாயர் 51-00 ஷிண்டே
8 பிரின்சஸ் ஜெயம் 49-00 என். அகமது—11
9 நிமிசோப் 47-50 நாதுசிங்—3
10 மேமஸ பிரின்சஸ் 45-50 லாரன்ஸ்—4
11 சுந்தர்பன்ஸ் 45-50 மகமது அகமது—1

டிப்ஸ்:
1 பிரைரி பிளவர்
2 நயாகீத்

எதிர்பாராத வெற்றி: சுந்தர் பன்ஸ்

**6. அமிர்தசரஸ் பிளேட்**
1600 மீட்டர் 4-45 மணி

1 தி பியூரர் 60-00 கரன் சிங்—2
3 ரேஷ்மா 60-00 எஸ். மார்ஷல்—4
3 நெரிசா 55-50 ஜி. கான்—6
4 நாக் நாக் 52-50 என். அகமது—5
5 ஜாஸ்பர் 50-50 மகமது அகமது—1
6 பேர் ஏஞ்சலா 50-00 ஹவுட்—3
7 பெபகோ 49-00 வெங்கடேசன்—7

டிப்ஸ்
1 பேர் ஏஞ்சலா
2 ரேஷ்மா

எதிர்பாராத வெற்றி: தி பியூரர்

**7. மதுரை பிளேட்**
1000 மீட்டர் 5-20 மணி

1 கேன்யான் 54-00 கெட்டில்—1
2 உத்தாஸபாதி எஸ. மார்ஷல்—8 54-00
3 பேடி லவ் புஞசா—9 52-50
4 ரேம்பிளிங் ரோஸ ஜி. கான்—3 52-50
5 பஞ்சாரின் கரன்சிங்—4 52-50
6 மேக் ஏ டபுள் 52-50 நாதுசிங்—5
7 பிராயச்சித்தம் 52-50 கஸ்ட்—2
8 போனி பிரே 52-50 மக்கோவன்—6
9 பதங் 52-50 ரோச்—7

டிப்ஸ்:
1. பிராயச்சித்தம்
2. உத்தரஸ்பாதி

எதிர்பாராத வெற்றி: கேன்யான்

ஜாக்பாட்:— 2, 3, 4, 5, 6-வது பந்தயங்கள்

டிரெபிள்:— 4, 5, 6-வது பந்தயங்கள்

டபுள்:— 6, 7-வது பந்தயங்கள்

எக்சாக்டா:— 3-வது பந்தயம்

தனலா:— 5-வது பந்தயம்

**நிச்சய வெற்றி**
**ஸ்மைலிங் பிரின்சஸ்**

## டாங்கேக்கு லெனின் விருது

மாஸகோ, டிச. 14— இந்திய வலது கம்யூனிஸ்டு தலைவர் எஸ். ஏ. டாங்கேவுக்கும், பொதுச்செயலாளர் சி. ராஜேஸ்வரராவுக்கும் மாஸ்கோவில் நடந்த ஒரு விழாவின்போது லெனின் விருதுகள் வழங்கப்பட்டன. ரஷிய ஜனாதிபதி போட்கோர்னி இந்த விருதுகளை வழங்கினார். இந்த விழா கிரெம்ளின் மாளிகையில் நடந்தது.

"நீங்கள் கம்யூனிஸ்டு இயக்கத்துக்கும், தொழிலாளர் இயக்கத்துக்கும், தேசிய விடுதலை இயக்கங்களுக்கும் ஆற்றிய பெரும் சேவைக்கும் இந்திய—ரஷிய நட்புறவு வளர்ச்சிக்காக அளித்துள்ள பெரும் பங்குக்கும் இந்த உயரிய விருது ஓர் அடையாளமாகும்" என்று இந்த விழாவில் போட்கோர்னி பேசுகையில் கூறினார்.

*ரூ. $1\frac{1}{2}$ கோடி அரிசி கடத்தல்*

## எதிர்க்கட்சி தலைவர்கள் பைலை பார்த்தனர்

சென்னை, டிச. 14— ரூ. $1\frac{1}{2}$ கோடி அரிசி கடத்தல் சம்பந்தமான பைலில் ஏதோ மர்மம் இருப்பதாகக் கூறியதை முதல்வர் கருணாநிதி மறுத்ததும், எதிர்க்கட்சிகளின் கோரிக்கைக்கு இணங்க, அந்தப் பைலைக் காட்டத் தயார் என்று கருணாநிதி நேற்று சட்டசபையில் அறிவித்ததும் தெரிந்ததே.

அதை தொடர்ந்து சபாநாயகர் புலவர் கோவிந்தன், அந்த பைலை எதிர்க்கட்சியினர் பார்க்கலாம் என்று நேற்றே அறிவித்திருந்தார்.

அதன்படி, நேற்று பிற்பகல் 3 மணிக்கு சபாநாயகர் அறையில் கீழ்க்கண்டவர்கள் அந்த பைலை பார்த்தார்கள்:-

அ. தி. மு. க: எட்மண்ட் கோவை செழியன், ஆலடி அருணா, ஹண்டே.

ப. காங்கிரஸ்: பொன்னப்ப நாடார்.

இ. காங்கிரஸ்: ஏ. ஆர். மாரிமுத்து. அனந்தநாயகி, ஏ. சுப்பிரமணியம்.

வ. கம்யூனிஸ்டு: கே. டி. கே. தங்கமணி.

சுதந்திரா: வெங்கடசாமி.

## ஈரோட்டில் ரெயில்வே ஊழியர் மாநாடு

ஈரோடு, டிச. 14— தென் ரெயில்வே லோகோ ரன்னிங் ஊழியர் மாநாடு இன்று ஈரோட்டில் நடைபெறுகிறது.

இன்று காலை 11 மணிக்கு சங்கத் தலைவர் மகாலிங்கம் கொடியேற்றினார்.

மாநாட்டுக்கு டி.வி. ஆனந்தன் எம். பி. தலைமை வகிக்கிறார்.

ஜி. ராமானுஜம், குல்கர்னி, ரெயில்வே போர்டுமெம்பர் பி. எம். கௌல், தென் ரெயில்வே ஜெனரல்மானேஜர் சப்தானு, தலைமை தனி அதிகாரி டி. வேணுகோபால், ஜி. ராஜாராமன் ஆகியோர் பேசுகிறார்கள்.

## எம்.பி.க்களின் சொத்து: விசாரணை கமிட்டி நிறுவ மந்திரி மறுப்பு

புதுடில்லி, டிச. 14— நாடாளுமன்ற உறுப்பினர்களின் சொத்துக்கள், கடன் ஆகியவை பற்றி விசாரிப்பதற்காக பார்லிமெண்ட் கமிட்டி ஒன்றை அமைக்க வேண்டும் என்று நேற்று மக்கள் சபையில் ஒரு கோரிக்கை வெளியிடப்பட்டது.

மத்திய உள்துறை மந்திரி பிரம்மானந்தரெட்டி அந்த யோசனையை நிராகரித்து விட்டார்.

எம். பி.க்களின் சொத்துக் கணக்கு சம்பந்தமாக சபையில் மதுதந்தவதே (சோஷலிஸ்டு) எழுப்பிய பிரச்னை பற்றி சுமார் அரை மணி நேரம் விவாதம் நடந்தது.

இந்தப் பிரச்னையில் ஆய்வுக் கமிட்டி அமைப்பது பற்றி பின்னர் கவனிக்கலாம் என்றார் மந்திரி பிரம்மானந்த ரெட்டி.

ஒழுங்கு முறை விதிகளின் படி, மாநில முதலமைச்சரிடம் மாநில பிரதமரிடம் மத்திய மந்திரிகளும் தங்கள் சொத்து—கடன் கணக்கை தாக்கல் செய்ய வேண்டும் என்று மந்திரி கூறினார்.

மத்திய மந்திரிகள் தங்கள் சொத்துக் கணக்கை பிரதமரிடம் கொடுத்திருப்பார்கள் என்று நான் நம்புகிறேன். எனது சொத்துக் கணக்கை கொடுத்துவிட்டேன் என்றார் பிரம்மானந்த ரெட்டி.

மந்திரிகள் தங்கள் சொத்துக் கணக்கை தாக்கல்செய்துவிட்டால் மட்டும் போதாது என்றும், சவால்களுக்கு பதில் சொல்லக்கூடிய வகையில் தக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும் என்றும் அவர் தெரிவித்தார்.

ஊழலைத் தடுப்பதற்கான தக்க பாதுகாப்பு தற்போதைய தேர்தல் முறையிலேயே உள்ளதாக அவர் சொன்னார்.

## பழமையான விக்கிரகம் சிக்கியது

சென்னை, டிச. 14— அய்யனார் விக்கிரகம் ஒன்றை கோடம்பாக்கத்தில் 3 பேர்களிடமிருந்து போலீசார் கைப்பற்றினர்.

இந்த விக்கிரகம் செம்பினால் ஆனது. இது 100 ஆண்டுகளுக்கு முற்பட்டது. பழமையானது என்று கருதப்படுகிறது.

இந்த விக்கிரகத்தை வைத்திருந்த சடகோபன் (வயது 25) ஜோசப் (வயது 46), முத்தையா (வயது 26) ஆகிய மூவர்கைதுசெய்யப்பட்டனர்

# வார ராசி பலன்

**ஜோதிடர் திலகம் கம்பிக்குடி சந்திர போஸ்**

'நவமணி' ஜோதிடர்

(14—12—1974 முதல் 20—12—1974 முடிய)

## மேஷம்

(அசுவினி, பரணி, கிருத்திகை 1ம் பாதம்)

ராசிநாதன் செவ்வாய் சனி சாரத்தில் எட்டில் தொடர்ந்து சஞ்சரிக்கும் நிலையால் எந்தக் காரியமும் திருப்தியற்ற நிலையிலேயே நடைபெற்றுவரும். பண விஷயங்களில், கேதுவின் நிலையும் மந்த கதியிலேயே இருப்பதால், சிறப்பாக இல்லா விடினும் தேவை பூர்த்தியடையும் நிலையில் வருமானம் இருக்கும். தொழில்ஸ்தான அதிபன் புதன் 17-ந் தேதி ராசி மாறிய பின் தொழில் தேக்க நிலை மறையும் வியாபாரிகளுக்கு வாரக் கடைசியிலிருந்து நல்ல வியாபாரத்தையும் லாபத்தையும் காணலாம். உத்தியோகத்திலிருப்போருக்கு சனியின் நிலை எதிர்ப்பான போக்கிலிருப்பதால், கடும் உழைப்பும் மனக்கவலையும் தோன்றி மறையும். குடும்ப ஒற்றுமை பாதிக்காது. நண்பர்களால் நன்மையும் உதவி உண்டு. வழக்கு வகையில் நம்பிக்கை தரும் செய்தி காணலாம். உடல் நலம் சிறு வைத்தியச் செலவுகளை உண்டாக்கி குணமுண்டு வெளியூர் பிரயாணம் நன்மை தருவதாக அமையவில்லை.

## ரிஷபம்

கிருத்திகை 2, 3, 4. -ம் பாதம் ரோஹிணி, மிருகசீரிஷம், 1, 2-ம் பாதம்.

இந்த வாரம் சுக்ிரன் எட்டில் மறைந்து கேதுவும் ராசியில் பலவீனம் பெறுவதால் கௌரவம் ஓரளவு பாதிக்கும். தனதிபன் புதன் பலம்பெற்று சஞ்சரித்தாலும், பொருளாதார தட்டுப்பாடு இருந்து கொண்டே இருக்கும். தொழில்துறையில் உழைப்பு மிகுந்தாலும் முன்னேற்றம் பாதிக்காது. உத்தியோக வர்க்கத்தினருக்கு நன்மை தரும் செய்தி கிடைக்கும். வியாபாரம்சாதாரணமாகவே நடைபெறும். விசேஷ அபிவிருத்தி எதிர்பார்க்க முடியாது. கணவர்மனைவி கருத்து வேறுபாடுகள் அடிக்கடி தலை தூக்கும். நண்பர்களால், நன்மையே ஏற்படும். வழக்கு விரைவில்முடியாது வெளியூர் பிரயாணங்களில் காரியானுகூலம் உண்டாகும். உங்கள் உடல்நலம் கேதுவின் நிலையால் லேசாக பாதித்து குணமுண்டாகும். நன்மைதரும் வாரமாகும்.

## மிதுனம்

(மிருகசீரிஷம் 3, 4-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3ம் பாதம்)

இந்த வாரம் சனிபகவான் வக்கிரத்தில் கயபலம் பெறுவதால் எந்தக் காரியத்திலும் சிறிது எச்சரிக்கையுடன் செயல்பட்டு வரவேண்டும். மன வெறுப்பு குறையாது தனதிபதி சந்திரன்பலம்பெற்றும் லாபாதிபன்பலம்குறைந்த நிலை வருமானம் எதிர்பார்த்தபடி அமையாது கடன்வாங்க வேண்டிய கட்டமே அதிகரிக்கும். தொழில்துறையில் மந்தமான அபிவிருத்தியேகாணும் வியாபாரத்தில் 19ந்தேதிக்கு மேல் நிலைமை அபிவிருத்தி காட்டிக்கொண்டுவரும். உத்தியோகத்தில் குருபலத்தால் நன்மையே காணும் மறைமுக எதிரிகள் தலைதூக்கினாலும் பாதிக்காது. குடும்ப ஒற்றுமை சுமாராகவே அமைகிறது. நண்பர்களுடன் கருத்து வேறுபாடுகள் தோன்றும். வழக்கில் முடிவுதாமதமாகும் வெளியூர் பிரயாணங்களில் வெற்றி உண்டாகும். உடல் நலம் பலவீனம் காட்டி மறையும் ராசிநேயருக்கு ஏழரை சனியின் உக்கிரம் கூடினாலும் குருபார்வையால் யாவும் நன்மையாக முடியும்.

## கடகம்

(புனர்பூசம் 4-ம் பாதம் பூசம் ஆயில்யம்)

சந்திரன் சஞ்சார நிலை உங்களுக்கு எந்தக் காரியத்திலும், வெற்றியையும், மனமகிழ்ச்சியையும் கொண்டுவரும். பணவசதி சிறப்பாக அமைந்தாலும், கட்டுப்படுத்த முடியாத செலவினங்கள் இருந்துகொண்டே இருக்கும். தொழில்துறையில் சுக்கிரன்நிலை அபிவிருத்தியும், புதிய ஒப்பந்தங்களும் காட்டும். வியாபாரத்தில் எதிர்பார்த்தபடி லாபம் கிட்டாது. எனினும் பாதிப்பு வராது. உத்தியோகத்தில் மேலிடத்து வெறுப்புக்கு ஆளாக வேண்டிய சந்தர்ப்பங்கள் உண்டு. குடும்பத்தில் ஒற்றுமை அதிகரிக்கும். நண்பர்களால் மனக் கவலைகள் தோன்றி மறையும். வழக்கு வகையில் இந்த வாரம் சனியின் போக்கு அனுகூலமற்ற நிலையிலேயே அமைகிறது. செலவினங்கள் இவ்வகையில் அதிகரிக்கும். வெளியூர் பிரயாணங்கள் நல்லபடியாக முடிந்து நன்மை உண்டாகும். உடல் நலம் அபிவிருத்தி காணும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1-ம் பாதம்.)

ராசிநாதன் சூரியன் கேந்திரத்தில் பலம்பெற, ராசியை குரு பார்க்கும் நிலை உங்கள் சுய காரியங்களில் வேகமான அபிவிருத்தியைகாண்பீர்கள். கௌரவம் உயரும். பணவசதி சிறப்பாகவே இருக்கும். தொழில்துறையில் பலஎதிர்ப்புக்களும்,முன்னேற்றம்பாதிக்கும்படியான நிலைமையும் ஏற்மென்றாலும், விபரீத விளைவுகள் உண்டாகாது. உத்திகத்தில், சுக்கிரன் பலத்தால் தோன்றும் இடைஞ்சல்கள் யாவும், மறையும். வியாபாரம் நன்கு நடைபெற்று விற்பனை கூடும். கணவர் மனைவி கருத்து வேறுபாடுகள் குறைந்து நன்மை காணும். நண்பர்களால் தொந்தரவும், கருத்து வேறுபாடுகளும் காட்டும். வழக்கு வகையில் வியாழன் வெற்றிகரமான போக்கிலிருப்பதால் பயமில்லை. வெளியூர் பிரயாணம் 19-ந் தேதிக்குமேல் வெற்றிபெறும். உடல்நலம், ஓரளவு வைத்தியச் செலவுகளுக்குப்பின் அபிவிருத்தி உண்டு. நன்மை தரும் வாரமாகும்.

## கன்னி

(உத்திரம் 2, 3, 4-ம் பாதம் அஸ்தம், சித்திரை 1, 2-ம் பாதம்.)

கன்னிராசிநாதன் புதன சுய சாரத்தில் பலம்பெற்றாலும். பாவ கிரக சம்பந்தங்களில் இது வரை சிக்கிவிட்டார்; 17-ந் தேதி புதன் தனுர் ராசியை அடைந்த பின் தடைபட்ட எந்தக் காரியங்களிலும் நல்ல முன்னேற்றம் உண்டு. பணவசதிக்குக் குறைவிருக்காது. தொழில்ஸ்தான வியாழன் மேலும் அபிவிருத்தியைஉண்டாக்குவார். உத்தியோகத்தில் மறைமுகமான தொந்தரகள் தலை தூக்கி சமாளிப்பீர்கள். வியாபாரத்தில் லாபம் குறையாது. குடும்ப ஒற்றுமை அதிகரிக்கும். நண்பர்களால், ராசிக்காரருக்கு காரிய வெற்றிகளும் உதவியும் உண்டு. வழக்கு அநுகூலமான போக்கிலேயே செல்கிறது. வெளியூர் பிரயாணம் தவிர்ப்பது நன்மையாகும். உடல்நலம் 17-ந்தேதிக்குமேல் நல்ல அபிவிருத்தி உண்டாகும் சிறந்த வாரமாகும்.

## துலாம்

(சித்திரை 3, 4-ம் பாதம் சுவாதி, விசாகம் 1, 2, 3-ம் பாதம்)

சுக்கிரன் ராசிக்கு மூன்றில் 19 தேதி முதல் பலம்பெற்று சஞ்சரிப்பதால் காரியங்களில் நல்ல செய்திகளை அடைவீர்கள். விருந்தாளிகள் வீடு தேடு வருவார்கள். பணவசதி குறைவில்லை. என்றாலும் பிறரை எதிர்பார்க்க வேண்டிய சந்தர்ப்பமுண்டாகும். தொழில் மந்த நிலை மறைந்து துரித அபிவிருத்தியை எதிர்பார்க்கலாம். வியாபாரத்தில் செவ்வாய் வக்கிர கிரசாரம் பெற்றதால் சுமாரான அபிவிருத்தியே காணும். உத்தியோகத்தில் மனமகிழ்ச்சித் தரும் போக்கே தென்படுகிறது. குடும்பத்தில் நிம்மதியில்லாமையும் மகிழ்ச்சிகுறைவும் தோன்றி மறையும். நண்பர்களால் உதவி உண்டு. வழக்கு சாதகமான நிலைமையை நோக்கி இன்னும் மாறவில்லை. வெளியூர் பிரயாணம் காரியங்கள் நன்கு நடைபெறும்.
உடல்நலம் நன்றாகவே அமைகிறது.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் அனுஷம், கேட்டை)

ரசிநாதன் பலஹீனமான நிலையிலேயே இருப்பதால், வீண் அபவாதங்கள் இலகுவில் உண்டாகும், எனினும் பாதிக்காது. பணவசதி தட்டுப்பாடு காட்டினாலும் ஒடி அடைந்துவிடும். தொழில் துறையில் அபிவிருத்தி கணிசமாக குறையுமென்றாலும் தொழில் நிற்காமல் நடைபெறும் வியாபாரத்தில் சுமாரான அபிவிருத்தியே காணும். ஓரளவு தேக்க நிலை சில நாட்களுக்கு இருக்கும். உத்தியோகத்தில் சூரியன் 16-ந் தேதி ராசி மாறியபின், இதுவரை இருந்த தொல்லைகள் குறைய ஆரம்பிக்கும். குடும்ப ஒற்றுமை சரியிருக்காது. நண்பர்களும் பகைவராவார்கள். வழக்கு வகையில், மேலும் தாமதங்கள் ஏற்படுத்துமாயினும் பாதிப்பு வராது. வெளியூர் பிரயாணத்தில் எதிர்பார்த்த வெற்றி கிட்டாது. உடல் நலம் செவ்வாயின் போக்கு, வைத்தியச் செலவுகளைக் காட்டுவதாக அமைகிறது. பொதுவில் சுமாரான வாரமாகும்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் 1-ம் பாதம்)

ராசியில் சுக்கிரன் சுய சாரத்தில் பலம் பெற்று 19-ந்தேதி முதல் சஞ்சரிப்பதால், இதுவரை உங்களுக்கு ஏற்பட்ட தொல்லைகள் விரைவில் மறைவதைக் காணலாம். கௌரவம் உயரும். பணவசதி பற்றுக்குறை பட்ஜெட் தொடர்ந்து இருந்து வந்தாலும், லாபாதிபதி பலத்தால் சமாளித்து விடுவீர்கள். தொழில் துறையில் தேக்க நிலை காட்டி சரியாகும். வியாபாரத்தில் — சனியின் நிலை இந்த வாரம் அனுகூலமின்றி இருப்பதால் சுமாராகவேஇருக்கும். உத்தியோகத்தில் சிறு பூசல்கள் தோன்றி மறையும். குடும்ப ஒற்றுமை சரிவர அமையவில்லை. நண்பர்களால் மனமகிழ்ச்சியும் உதவும் உண்டு. வழக்கு வெற்றியடையும் வாய்ப்பு மிகவும் குறைவு வெளியூர் பிரயாணம்; நன்மைதரும். உடல் நலம் பாதிப்பின்றி நன்மை தரும். உடல் நலம் பாதிப்பின்றி நல்லபடியாகவே அமைகிறது

## மகரம்

(உத்திராடம் 2, 3, 4-ம் பாதம்-திருவோணம், அவிட்டம் 1, 2-ம் பாதம்)

ராசிநாதன் சனி ஆறுமிடத்தில் பலஹீனம் பெற்ற நிலையில் இந்த வாரம் காண்பதால் புதிய எதிர்ப்புக்களை சமாளிக்க வேண்டிவரும். பணம் கைக்கு எப்படியும் வந்து சேர்ந்துவிடும், எதிர்பார்த்தபடி வருமானம் கிடைக்கும். தொழில்துறையில் புதிய இடையூறுகள் தோன்றி மறையும். உத்தியோகத்தில் சுக்கிரன் பலத்தால் முன்னேற்றமான சூழ்நிலை உண்டாகும்.

வியாபாரம் நன்கு நடைபெறும். குடும்பத்தில் கணவர் மனைவி கருத்து வேறுபாடுகள் மறைந்து ஒற்றுமை கூடும். நண்பர்களால், தொல்லைகளையும், கருத்து வேறுபாடுகளையும் காட்டும். வழக்கு படிப்படியாக அபிவிருத்தியடையும். வெளியூர் பிரயாணம் நன்மை தரும். ராசி நேயரின் உடல்நலம் சிறு வியாதிகளால் பாதித்து வைத்தியச் செலவுக்குமேல் குணமடையும். சாதாரண வாரமாகும்.

## கும்பம்

(அவிட்டம், 3, 4-ம் பாதம் சதயம், பூரட்டாதி 1, 2, 3-ம் பாதம்)

வியாழன் ராசியில் மிகவும் பலம் பெற்று சஞ்சரிப்பதால், எதிலும், வெற்றியை உண்டாக்கும் வாரமாகும். தனதிபதியும் குருவாகி பலம் பெறுவதால் பணவசதி நன்றாக இருக்கும். எதிர்பார்த்தபடி பண வரவு உண்டு. தொழில் நன்கு நடைபெறும். உத்தியோகத்தில், சிறு எதிர்ப்புக்களும், மேலதிகாரிகளின் வெறுப்புக்கும் ஆளாக வேண்டிவரும். வியாபாரம் சிறப்பாகவே நடைபெறும். லாபம் அதிகரிக்கும். குடும்ப ஒற்றுமை அதிகரிக்கும். நண்பர்களால் காரிய அனுகூலம் ஏற்படும். வழக்கு கையில் சூரியன் லாபத்திற்கு வந்தபின் முன்னேற்றம்துரிதமடையும். பிரயாணங்களில் எதிர்பார்த்த வெற்றி அமையாது. பிரயாண காலங்களில், பொருட்களை அதிக கவனத்துடன் பாதுகாக்க வேண்டும் உடல்நலம் நன்கு அமைகிறது நன்மையான வாரமாகும்

## மீனம்

(பூரட்டாதி பாதம் 4.ம், உத்திரட்டாதி, ரேவதி)

உங்கள் ராசிநாதன் வியாழன் இந்த வாரம் செல்லும் நிலை, வேலை கிடைக்காத நேயர்களுக்கு புதிய வேலைவாய்ப்பை ஏற்படுத்தும். கௌரவம் உயரும் தனதிபதி செவ்வாய் சாரம் அனுகூலமின்றியே இருப்பதால் பணக்கஷ்டம் இடைக்கிடையே தோன்றி மறையும். தொழில் நன்கு அபிவிருத்தியடையும். வியாபாரம் சீராகவே நடைபெறும். என்றாலும், லாபமிருக்காது. உத்தியோகத்தில் இருப்போருக்கு பதவி உயர்வுக்கான சூழ்நிலை காட்டும். குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள் தோன்றிக் கொண்டே இருக்கும். நண்பர்களால் எதிர்பார்த்த உதவி ஏற்படாவிடினும், ஓரளவு நன்மை காட்டும் வழக்கின் போக்கு எதிர்ப்பு அதிகரிக்கும் நிலையில் இருந்தாலும் பாதகம் ஏற்படாது. வெளியூர் பிரயாணங்களில் எதிர்பார்த்தபடி காரியங்கள் நடைபெறாது. உடல்நலம் லேசான பலஹீனம் காட்டி மறையும். மொத்தத்தில் நன்மை தரும் காலமாகும்.

சுபம்.

---

# 'இரு நாக்குகள் கொண்ட மனோகரன்': முஸ்லிம் லீக் எம். எல். ஏ. கடும்தாக்கு

**கோவை, டிச. 14—அ. தி. மு. க. துணைப் பொதுச் செயலாளர் இரு நாக்கு படைத்தவர் என்று முஸ்லிம் லீக் தலைவரும், சட்டமன்ற உறுப்பினருமான லத்தீப் கூறினார்.**

**தி. மு. கழகத்தை முஸ்லிம் லீக் ஆதரிக்கக் காரணம் அவர்கள் அளிக்கும் சலுகைகளுக்காக அல்ல. அவர்களின் அன்பிற்காகவும், பண்பிற்காகவும்தான் என்றும் அவர் கூறினார்.**

கோவை கோட்டைமேட்டிலுள்ள க்பால் திடலில் நடைபெற்ற முஸ்லிம் லீக் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு, லத்தீப் பேசியதாவது;

''இன்று சில இளைஞர்கள் கவர்ச்சியை நம்பி சிலரை நேசிக்கிறார்கள். நீங்கள் யாரை வேண்டுமானாலும் ஆதரியுங்கள். அதனால் நாட்டுக்கும் மக்களுக்கும் நன்மை ஏற்பட வேண்டாமா? நமது நாட்டில் எத்தனையோ அரசியல் கட்சிகள் உள்ளன. இந்திரா காந்தி, காமராஜ், ஜெயப்பிரகாஷ் நாராயணன் போன்ற பாரம்பரியமுள்ள தலைவர்கள் இருக்கிறார்கள்.

### உண்மையான புரட்சித் தலைவர் யார்?

ஆனால் எந்த பொருளாதார திட்டமுமில்லாத, உழைப்பில்லாத, கவர்ச்சியை நம்பி உண்மை அரசியல் இல்லாத ஒருவரை இளைஞர்கள் தலைவராக ஏற்றுக்கொண்டால் காலத்தில் விளைவுகள் மிகவும் மோசமாக இருக்கும்.

புரட்சி தலைவர் என்று சிலரைக் கூறுகிறார்கள். உலகத்தில் உண்மையான புரட்சியை ஏற்படுத்தியவர், எல்லோரும் சமம் என்று கூறியவர் நபிகள் நயாகமே விதா இப்படிப் பட்ட போலீகள் அல்ல.

### நல்ல உள்ளம் இல்லாத மனோகரன்

மதுரையில் நாஞ்சில் மனோகரன் பேசியதாக பத்திரிகையில் செய்தி வந்துளது. என்ன கூறியிருக்கிறார் என்றால் முஸ்லிம் லீக்கைப்பற்றி நான் பேசவே யில்லை. அது எங்கே இருக்கிறது. காயிதே மில்லத் மறைந்த பிறகு அப்படி ஒருகட்சியே இல்லை என்று கூறியிருக்கிறார். மனோகரன் நன்றாக பேசுவார். ஆனால் நல்ல உள்ளம் இல்லாதவர்.

மனோகரனுக்கு தெரியாமல் இருக்கலாம். முஸ்லீம் லீக் இயக்கம் யாரால் எப்பொழுதுதோன்றப்பட்டதுஎன்று. முஸ்லீம் லீக் நிலையான தத்துவம் கொண்டது. யார் இருந்தாலும் இல்லகவிட்டாலும் முஸ்லீம் லீக் இருக்கும். மனோகரன் இன்று ஒன்றை சொல்லுவார், நாளை ஒன்று கூறுவார். காலையில் தமிழக முதல்வர் கருணாநிதியைப் புகழ்ந்து பேசினால் அன்று மாலையிலேயே இழித்துப்பேசினார். அவர் இருநாக்கு படைத்தவர், அ தி மு க வில் சேர்ந்தபிறகுதான் இப்படி பேசுகிறார்.

உருது பேசும் முஸ்லிம்களுக்கு சலுகையளிக்கின்ற நேரத்தில் சட்டப் பிரச்சினையைப் பற்றி கூறினார்கள். அப்போது முதல்வர் கருணாநிதி சட்டசபையைப்பற்றி கவலையில்லை. அதில் இடம் இல்லாவிட்டாலும் இஸ்லாமிய சமுதாயத்திற்கு என் இருதயத்தில் இடமிருக்கிறது. ஆகவே இதிலிருந்து பின்வாங்கயாட்டேன் என்று கூறி சலுகையளித்தார்.

தி. மு. கழகத்தை நாங்கள் ஆதரிக்கிறோம் என்றால் அவர்கள் அளிக்கிற சலுகைகளுக்காக அல்ல. அவர்களின் அன்பிற்காகவும், பண்பிற்காகவும் தான்.

இவ்வாறு அப்துல் லத்தீப் கூறினார்.

கோவை மாவட்ட செயலாளர் சி.ஐ. அல்லாபிச்சை, முகமது ஹிப்ராயிம் ஆகியோரும் பேசினர்.

---

# சிகரெட் நெருப்பால் குடிசையில் தீவிபத்து

சென்னை, டிச. 14—சென்னை சேப்பாக்கம் சிதம்பரம் ஸ்டேடியம் பகுதியில் வியாழனன்று ஏற்பட்ட ஒரு தீவிபத்தில் இரு குடிசைகள் நாசமடைந்தன. இதில் யாரும் காயமடையவில்லை. இவ்விபத்தில் சுமார் ரூ. 1500 சேதம் ஏற்பட்டதாக மதிப்பிடப்படுகிறது. சிகரெட்டை அணைக்காமல் போட்டதன் விளைவாக இந்த விபத்து ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது.

---

சட்டசபையில் அமைச்சர் தகவல்

# தமிழக அரசுக்கு கோதுமை சப்ளை செய்ய பஞ்சாப் மறுப்பு

சென்னை, டிச. 14—தமிழ்நாடு அரசுக்கு கோதுமை சப்ளை செய்ய பஞ்சாப் அரசு மறுத்துவிட்டது. இந்த தகவலை நேற்று தமிழ்நாடு சட்டசபையில் அமைச்சர் மன்னை நாராயணசாமி வெளியிட்டார்.

தமிழ்நாடு அரசு மீது கொண்டுவரப்பட்டிருந்த நம்பிக்கையில்லாத்தீர்மானத்தின் மீது நேற்று முன்தினம் சட்ட சபையில் விவாதம் நடந்தது.

இ. காங்கிரஸ் உறுப்பினர் ஏ. சுப்பிரமணியம் பேசியதாவது:

கடந்த பிப்ரவரியில் படி 2 ரூபாயாக விற்றுக்கொண்டிருந்த அரிசி இப்போது 7 ரூபாயாக விற்கப்படுகிறது.

இந்த அளவுக்கு விலை ஏற என்ன காரணம்?

சில மாதங்களுக்கு முன்பு அமைச்சர் பேசும் போது அரிசி கடத்தப்படுவதில்லை என்று கூறினார். ஆனால் துபாய் போன்ற நாடுகளில் தஞ்சை அரிசி கிடைப்பதாகக் கூறப்படுகிறது.

இது கட்சிப் பிரச்னை அல்ல. 4½ கோடி மக்களை சாக அடிக்கும் பிரச்னை? நெல் கொள்முதலில் உணவு கார்ப்பரேஷன் அதிகப்படியாகக் கொள்முதல் செய்துள்ளது. நமது சிவில் சப்ளை கார்ப்பரேஷன் குறைவான கொள்முதல் செய்துள்ளது.

அமைச்சர் மன்னை (குறுக்கிட்டு): இங்கே தந்த அறிக்கைப்படி உணவு கார்ப்பரேஷன் 7 ஆயிரம் டன்தான் கொள்முதல்செய்திருக்கிறது. நம் சிவில் சப்ளை கார்ப்பரேஷன் ஒரு லட்சத்து ஓராயிரம் டன் கொள்முதல் செய்து இருக்கிறது.

ஏ. சுப்பிரமணியம்: பஞ்சாபில் இருந்து கோதுமையை ஏன் தனியார் கொள்முதல் செய்ய அனுமதிக்க வேண்டும்?

அமைச்சர் மன்னை: பஞ்சாபிடம் நாம் கோதுமை கேட்டோம். 1¼ கோடி ரூபாய் பணமும் அனுப்பினோம். தனியார் கொள்முதலை அவர்கள் அனுமதித்தார்கள். நமக்கு இல்லை என்று நம் பணத்தை திருப்பி அனுப்பிவிட்டார்கள். தனியார் 5 ஆயிரம் டன் வாங்க அனுமதித்தார்கள்.

தங்கமணி: விலை வித்தியாசம் இருக்கிறதே.

முதல்வர்: சிவில் சப்ளை கார்ப்பரேஷன் நிர்ணயித்த விலைக்குத்தான் வாங்கினார்கள்.

ஆலடி அருணா: எங்களுக்குத்தான் தரவேண்டும் என்று நிபந்தனை போட்டிருக்கக் கூடாதா?

முதல்வர்: அப்படி நாம் சொன்னால் நமக்கு கோதுமையே அங்கிருந்து வந்திருக்காது.

---

பொய்ச் செய்தி வெளியிட்டதற்காக

# நெடுஞ்செழியனுக்கு ரூ. 1 லட்சம் கொடுக்க கோர்ட் உத்தரவு

சென்னை, டிச. 14—பொய்ச் செய்தி வெளியிட்டதற்காக, வ. கம்யூ தலைவர் கல்யாணசுந்தரமும், வ. கம்யூ எம். பி. முருகானந்தமும் அமைச்சர் நெடுஞ்செழியனுக்கு ரூ. 1 லட்சம் நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்று சென்னை ஐகோர்ட் தீர்ப்புக் கூறியுள்ளது.

இதுபற்றிய விவரம் வருமாறு:—

வ. கம்யூனிஸ்டு கட்சி பிரமுகர்முருகானந்தம், ''ஊழலோ ஊழல்'' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையை ஜனசக்தி பத்திரிகையில் கல்யாணசுந்தரம் வெளியிட்டார்.

அந்தக் கட்டுரை தொடர்பாக இந்த வழக்கு தொடரப்பட்டது.

### வைர நெக்லஸ்

ராமநாதபுரம் மாவட்டம் கீழக்கரையில்உள்ள அரசுஉயர்நிலைப் பள்ளிக்கூடம் ஒன்றை கல்வியமைச்சர் நெடுஞ்செழியன், தனியார் ஒருவருக்கு மாற்றிக் கொடுத்ததாகவும், இதற்காக வைர நெக்லஸ் லஞ்சம் வாங்கிக்கொண்டதாகவும் அந்த கட்டுரையில் எழுதப்பட்டிருந்தது.

### பொய்; அவதூறு

இது பொய் என்றும், பொய் என்று தெரிந்தே அந்தப் பொய்யை எழுதியதாகவும், இழிவு படுத்த வேண்டும் என்ற கெட்ட நோக்கத்துடன் பொய்யை எழுதியதாகவும், எனவே ''அவதூறு'' என்ற குற்றத்தைச் செய்து இழிவுபடுத்தியதற்காக நஷ்டஈடு ரூ. லட்சம் தரவேண்டும் என்றும் நெடுஞ்செழியன் அந்த வழக்கில் கூறி இருந்தார்.

இந்த வழக்கில், ஐகோர்ட் நீதிபதி எஸ். மோகன் நேற்று தீர்ப்பு கூறினார்.

### ரூ. 1 லட்சம் நஷ்டஈடு

தீர்ப்பில் அவர் குறிப்பிட்டதாவது:—

''நெடுஞ்செழியன், தமிழக அரசில் ஓர் அமைச்சர்; ஆளும் கட்சியாக உள்ள தி. மு. கழகத்தின் பொதுச் செயலாளர். உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்.

அவர் கௌரவத்தை பாதிக்கும் வகையில் இந்த கட்டுரை அமைந்துள்ளது.

ஆகவே, அவர் கேட்டுக் கொண்டபடி, கல்யாணசுந்தரமும், முருகானந்தமும் கூட்டாக ரூ. 1 லட்சம் நஷ்டஈடு கொடுக்கவேண்டும் என்று உத்தரவிடுகிறேன்.

இந்த வழக்கின் செலவு தொகையையும் அவருக்கு கொடுக்கவேண்டும்.''

மேற்கண்டவாறு தீர்ப்பு கூறப்பட்டது.

### வக்கீல் வானமாமலை

கல்யாணசுந்தரம், முருகானந்தம் ஆகியோர் சார்பில் நேற்று ஆஜரான வக்கீல் வானமாமலை, தன்னுடைய கட்சிக்காரர்களுக்கு 'சம்மன்' கொடுக்கப்படவில்லை என்று கூறினார்.

ஆனால், சம்மன் அனுப்பப்பட்டு இருப்பதாக, கோர்ட்டில் தெரிவிக்கப்பட்டது.

---

# நடுக்கும் குளிருக்கு 20 பேர் பலி

நடுக்கும் குளிருக்கு 20 பேர் பலியானார்கள்.

வடநாட்டின் பல பகுதிகளில் கடுமையான குளிர் காற்று, வீசுகிறது. குறிப்பாக பீகார் மாநிலத்தில் குளிர் காற்று அதிகமாக வீசுகிறது.

மாலை 6 மணிக்கு மேல் வீதிகளில் ஆள் நடமாட்டமே இல்லை. இரவு நேரங்களில் தண்ணீர் உறையக்கூடிய அளவுக்கு குளிர் இருக்கிறது.

பீகார் மாநிலத்தில் மட்டும் கடந்த 2 நாட்களில் குளிர் தாங்காமல் 20 பேர் செத்தார்கள். கசாரியாபாக் நகரில் மட்டும் நேற்று 8 பேர் குளிரில் நடுங்கி செத்தார்கள்.

பறவைகளும், கால்நடைகளும் குளிர் தாங்காமல் சாகின்றன.

### சட்டசபையில் விவாதம்:

# சினிமா கொட்டகைகளை தேசியமயம் ஆக்க அ. தி. மு. க. எதிர்ப்பு

சென்னை, டிச. 14—சினிமா கொட்டகைகளைத் தேசியமயம ஆக்கும் கொள்கைக்கு அ. தி. மு. க. எம். எல். ஏ. கோவைச் செழியன் எதிர்ப்புத் தெரிவித்தார்.

இது குறித்து இன்று தமிழக சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது கேட்கப்பட்ட கேள்விகளும் அதற்கு அமைச்சர்கள் அளித்த பதில்களும் வருமாறு:—

திரைப்படக் கொட்டகைகள் அரசுடமை ஆக்கப்படுமா? என்று அழகுத்தேவர் (பார்.பிளாக்) ஒரு கேள்வி கேட்டார்.

இது அரசின் ஆலோசனையில் இருப்பதாக அமைச்சர் ராஜாங்கம் பதில் அளித்தார்.

கோவை செழியன்: இப்போதே சில தியேட்டர் அருகில் எம். ஜி. ஆர். படங்களைப் போடாதே என்கிறார்கள். விற்பனை வரி அதிகாரிகள், தடுக்கிறார்கள். இந்த நிலையில் நாட்டுடமை ஆக்கப்பட்டால் என்ன ஆகும்?

அமைச்சர் சாதிக்பாட்சா: வரி ஏய்ப்பைத்தான் அதிகாரிகள் கண்டுபிடிக்கிறார்கள். படத்தைப் போட்டால்தான் வருவாய் கிடைக்கும்.

தமிழ்நாடு தியேட்டர் கார்ப்பரேஷன் துவக்கப்பட்டதில் இருந்து 12—12—74 வரை 103 மனுக்கள் வந்திருக்கின்றன.

இதில் 76 மனுக்கள் அனுமதிக்கப்பட்டு 83 லட்சத்து 90 ஆயிரம் ரூபாய் அனுமதிக்கப்பட்டுள்ளது.

இதுவரை 34 மனுக்களுக்கு 30 லட்ச ரூபாய்தரப் பட்டுள்ளது. ஒரு செமி பர்மெனெண்ட் தியேட்டருக்கு $1\frac{1}{4}$ லட்சம் ரூபாய் தரப்படுகிறது. து அதன் திட்ட மதிப்பில் 70 சதவிகிதம் என்று அமைச்சர் ராசாங்கம் சட்டசபையில் ஒரு கேள்விக்கு பதில் அளித்தார்.

இதற்கான கேள்வியை சோலையா, சிவப்பிரகாசம் ஆகியோர் கேட்டுஇருந்தனர்.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

கண்மதியன் கவிதைகள் திறனாய்வு கருத்தரங்கு ஹரிசங்கர்: தலைமையில் திருச்சி தியாகராஜன், நாரண துரைக்கண்ணன், புலவர் பழனி பாலசுந்தரனார், ப. வீரமணி பேசுவார்கள். 88/89 லோட்டஸ் நகர், சூரியநாராயண செட்டித்தெரு, ராயபுரம், மாலை 6 மணி.

பாரதி இளைஞர் சங்கம் சார்பில் பாரதி பிறந்தநாள் விழா: மகாகவி பாரதியாரின் விஞ்சிய புகழுக்குக் காரணம் நாட்டுப் பாடல்களா? சமயப் பாடல்களா? என்பது பற்றி விவாதம். தலைமை: ம. பொ. சி. காலை 10 மணி. மகாகவி பாரதி கவிதைகளில் மேலோங்கி நிற்பது காதலா? வீரமா? என்பது பற்றி விவாதம். தலைமை: ஔவை நடராசன், மாலை 4-35 மணி. கற்பகாம்பாள் கல்யாண மண்டபம், மயிலாப்பூர்.

19-ம் படைப்பிலக்கியப் பெருவிழா தலைமை: க. சு. திருநாவுக்கரசு 'அண்ணாவின் நாவல்கள்' பற்றி ந. பிச்சமுத்து, மு. அன்பரசன், புலமைப்பித்தன் பேசுவர். மாவட்ட மத்திய நூலகம் மாலை 5 மணி.

சாயி பைன் ஆர்ட்ஸ் துவக்க விழா: ஜஸ்டிஸ் எஸ். மோகன் தலைமையில் ராதாகிருஷ்ண சுவாமிஜி முன்னிலையில் டி. கே. பட்டம்மாள் துவக்கி வைக்கிறார். ஸ்ரீ கலா மண்டபம், மயிலாப்பூர், மாலை 6 மணி.

பளு தூக்குவோர், உடற்பயிற்சியாளர் சங்க வெள்ளி விழா: இரண்டாம் நாள் தலைமை: அமைச்சர் அன்பழகன், ஏ.வி.எம். ராஜன் பரிசுகள் வழங்குவார். அரண்மனைக்காரவீதி, கோகலே மண்டபம், மாலை 7-மணி.

## கண்ட்ரோல் துணி அதிகம் கிடைக்க அரசு ஏற்பாடு

புதுடெல்லி, டிச. 14—மக்களுக்கு கண்ட்ரோல் விலையிலான துணி போதுமான அளவில் கிடைக்கவில்லை என்றால் கண்ட்ரோல் துணி உற்பத்தியை 40 கோடி மீட்டரிலிருந்து 80 கோடி மீட்டராக உயர்த்த வேண்டுமென ஜவுளி ஆலைகளுக்கு உத்தரவிடுவது பற்றி மத்திய அரசு சிந்தித்து வருகிறது.

இத்தகவலை பார்லிமெண்டில் வர்த்தக மந்திரி டி. பி. சட்டோபாத்யாயா தெரிவித்தார்.

முன்னதாக மந்திரி ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில் மாதம் ரூ 400க்கு குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கு ரேஷன்கார்டு அடிப்படையில் கண்ட்ரோல் துணியை விற்க மாநில அரசுகள் கேட்டுக் கொள்ளப் பட்டுள்ளதாகத் தெரிவித்தார்.

## தீயணைப்பு படைக்கு பெயர் மாற்றம்: கருணாநிதி அறிவிப்பு

சென்னை, டிச. 14—தீயணைப்புப் படைக்கு இப்போதிருக்கும் பெயருக்குப் பதிலாக புதிய பெயர் வைக்கப்படுவது பற்றி அரசு ஆலோசித்து வருவதாக இன்று சட்டசபையில் முதலமைச்சர் கருணாநிதி அறிவித்தார்.

தமிழ்நாட்டில் இந்த ஆண்டு புதிதாக 26 இடங்களில் தீயணைப்பு நிலையங்கள் அமைக்கப்படும் என்றும் முதலமைச்சர் கருணாநிதி இன்று சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது தெரிவித்தார்.

தீயணைப்புப் படையினரை விவசாயிகளுக்கு உதவி செய்ய பயன்படுத்தப்படுமா என்று கேட்கப்பட்டதற்கு, அந்த யோசனை தற்போது ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று கருணாநிதி பதிலளித்தார்.

சௌந்தரபாண்டியனின் மற்றொரு கேள்விக்குப் பதிலளித்த முதலமைச்சர், தீயணைப்புப் படைக்கு பெயர் மாற்றம் செய்வது குறித்து பரிசீலனைசெய்து வருவதாக தெரிவித்தார்.

தீயணைப்புப் படையினர் தீயை அணைப்பது மட்டுமல்லாமல் பலவிதமான ஆபத்து நேரங்களிலும் உதவி வருவதால் அதைப பிரதிபலிக்கும் வகையில் பெயர் இருந்தால் நன்றாக இருக்கும் என்று தாம் யோசனை தெரிவித்திருந்ததாக முதலமைச்சர் கூறினார்.

இதற்கேற்ப தீ மற்றும் விபத்து தடுப்பு பாதுகாப்பு படை" என்ற பெயர் பரிந்துரைக்கப்பட்டிருப்பதாகவும் அந்தப் பெயர் அவ்வளவு திருப்திகரமாக இல்லை என்பதால் வேறு பொருத்தமான பெயர் கிடைக்கும்வரை இப்போதுள்ள பெயரே நீடிக்கும் என்றும் கருணாநிதி கூறினார்.



### அ. தி. மு. க. மீது கல்யாணசுந்தரம் தாக்கு

# "அரசியல் தெரிந்தது எங்கள் கட்சி ஒன்றே: மற்றவை காளான்கள்"

பாண்டிச்சேரி, டிச. 14—அரசியல் தெரிந்த கட்சி எது என்றால் அது கம்யூனிஸ்டு கட்சி ஒன்றுதான். அது மாபெரும் கட்சி. மற்ற எல்லா கட்சிகளும் மழையில் முளைத்த காளான்கள் கொள்கை இல்லாத கட்சிகள்" என்று வலது கம்யூனிஸ்டு கட்சி செயலாளர் எம். கல்யாணசுந்தரம் கூறினார்.

பாண்டிச்சேரி அண்ணா திடலில் நடந்த பொதுக் கூட்டத்தில் கல்யாணசுந்தரம் பேசுகையில் அ.தி.மு.க. உட்பட மற்ற கட்சிகளை இவ்விதம் மறைமுகமாக தாக்கினார்.

இக்கூட்டத்துக்கு இளமன்சோ தலைமை வகித்தார்.

அவர் பேசுகையில் மேலும் கூறியதாவது:—எங்கள் கட்சியை சிறிய கட்சி என்று பாண்டிச்சேரி கவர்னர் சேத்திலால் கூறினாராம். இதிலிருந்து பாண்டிச்சேரி கவர்னருக்கு அரசியல் தெரியவில்லை என்பது தெரிகிறது. கவர்னர் என்றால் அரசியல் புரிந்து தொந்திருக்க வேண்டும்.

### தேர்தலை நடத்தாததேன்

தன கையில் அதிகாரம் அனைத்தும் வரவேண்டும் என்பதற்காக சர்வாதிகாரப் போக்கில் இங்கு பொதுத் தேர்தலை நடத்த கவர்னர் ஆவன செய்யாமல் இருந்து வருகிறார்.

பாண்டிச்சேரியில் மக்கள் ஆட்சி ஏற்பட்டால்தான் நம் குறைகளை தட்டிக் கேட்க முடியும். அதிகாரிகளின் ஆட்சி நடக்கும்போது யாரைக் கேட்க முடியும்?

### ஜே. பி. மீது தாக்கு

சுதந்திர ஜனநாயகத்தை காக்கக்கூடிய கட்சி கம்யூனிஸ்டு கட்சியாகும். பழைய காங்கிரஸ் தேச விரோத செயல்களில் ஈடுபட்டு வன்முறையைத் தூண்டுகிறது.

ஊழல் அற்ற ஆட்சியை ஏற்படுத்தப் போவதாகக் கூறி ஜெயப்பிரகாஷ் போராட்டம் நடத்துகிறார். ஆனால் இப்போராட்டத்தில் உள்ளவர்கள் எல்லாம் லஞ்ச ஊழல்காரர்களே. குடிகாரர்கள் எல்லாம் சேர்ந்து மதுவிலக்கு கேட்பது போல உள்ளது ஜெயப்பிரகாஷின் போராட்டம்.

இவ்வாறு கல்யாணசுந்தரம் கூறினார்.

கூட்டத்தில் முன்னாள் மந்திரி சுப்பையா, குருசாமி, ரங்கநாதன், ஆழ்வார் ஆகியோரும் பேசினர்.

# சட்டசபையில் இ. காங்கிரஸ் திணறல்: தி. மு. க.வினர் சிரிப்பு

சென்னை, டிச. 14—அரிசி கொள்முதல் பற்றி இ.காங்கிரஸ் உறுப்பினர் ஏ. சுப்ரமணியம் கேட்ட கேள்விகளுக்கு முதல்வர் கருணாநிதி பதில் அளித்துக் கொண்டுவந்தார்.

அப்போது சுப்ரமணியத்திடம் ஒரு கேள்வியை கருணாநிதி திருப்பிக் கேட்டபோது அதற்குப் பதில் சொல்ல முடியாமல் அவர் திணறினார்.

அதைக் கண்டு தி. மு. க. வினர் சிரித்தனர்.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின்மீது இன்று 2-வது நாள் விவாதத்தில் கலந்து கொண்டு சுப்பிரமணியம் பேசினார். அது சமயம் இந்த விவாதம் நடந்தது.

ஏ. சுப்பிரமணியம்:—அரிசி கொள்முதலை அரசு ஏற்றிருப்பதற்கு மகிழ்ச்சி. ஆனால் நெல்லை கூட்டுறவு சங்கங்கள் அதிக விலைக்கு வாங்கும் என்பது ஏன்?

முதலமைச்சர்:—அதிகவிலை வேண்டுமா அல்லது வேண்டாமா?

ஏ. சுப்பிரமணியம்:—ஒரே விலையில் கொள்முதல் செய்ய வேண்டும்.

முதலமைச்சர்:—ஒரே விலை என்றால் மத்திய அரசின் லெவி விலை 74 ரூபாய். அதே விலையில் கொள்முதல் செய்ய வேண்டும் என்கிறீர்களா?

ஏ. சுப்பிரமணியம்: விவசாயிக்கு கட்டுப்படியான விலை தரப்பட வேண்டும்.

முதலமைச்சர்:—அதைத்தான் நான் நேற்று அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறேன். மத்திய அரசின் விலை 74 ரூபாய்; கூட்டுறவு சங்கங்கள் சற்று கூடுதலாக கொடுக்கும் என்று சொல்லியிருக்கிறேன். இதுபற்றி உங்கள் கருத்து என்ன?

### திணறல்; சிரிப்பு

ஏ. சுப்பிரமணியம்:—விலையை கூட்டுறவு சங்கங்கள் தீர்மானிக்குமா?

முதலமைச்சர்:— அரசாங்கம்தான் விலையை நிர்ணயிக்கும் என்பதை தெளிவாகச் சொல்லியிருக்கிறேன்.

ஏ. சுப்பிரமணியம்:—சிவில் சப்ளை கார்ப்பரேஷன் நேரடியாக வாங்கலாமே.

முதலமைச்சர்:—அப்படி என்றால், 74 ரூபாய்க்கே வாங்கலாம் என்றல்லவா ஆகும்?

இதற்கு ஏ. சுப்பிரமணியம் பதில் கூறாமல், 'அடுத்ததாக' என்று ஆரம்பித்த போது, திமுக உறுப்பினர்கள் வரிசையிலிருந்து சிரிப்பொலி எழுந்தது.

### கோதுமை: பஞ்சாப் ஏன் மறுத்தது?

இந்த விவாதத்தில் தொடர்ந்து ஏ. சுப்பிரமணியம் பேசும்போது கூறியதாவது.—

பஞ்சாபில் யார் கோதுமை வழங்கினார்கள்? என்ன விலைக்கு வாங்குகிறார்கள் என்பதுதெரியவேண்டும். தமிழ்நாடு அரசுக்கு பஞ்சாப் அரசு ஏன் நேரிடையாக கோதுமை தர மறுத்தார்கள்? அது பற்றி கடிதம் எழுதப்பட்டதா? அப்படி எழுதப்பட்டிருந்தால் அதை சட்டசபையில் வைக்கவேண்டும்.

57 கிலோவுக்கு விலை நிர்ணயித்துவிட்டு 69 கிலோ கேட்பதாக சொல்கிறார்கள். இது ஏன்?

பதுக்கப்பட்ட உணவுப் பொருள்களை வெளியே கொண்டுவர வேண்டும். சட்டசபையில் இந்த நம்பிக்கையில்லாத் தீர்மானம் தோற்கடிக்கப்படலாம். ஆனால் இந்த ஆட்சி மீது மக்களுக்கு நம்பிக்கை இல்லை" நீங்கள் ஆட்சியில் இருக்க தகுதியற்றவர்கள்" என்று சுப்பிரமணியம் கூறினார்.

### பிச்சைக்காரர்கள் 9 பேர் கைது

நாகை, டிச 14— நாகையில் உள்ள திகைர விலாஸ ஓட்டல் வாசலில் பொதுமக்களுக்கு தொல்லை கொடுத்த பிச்சைக்காரர்களை நாகை டவுன் போலீஸ சப்-இன்ஸபெக்டர் மதன் மோகன் கைது செய்து வழக்கு பதிவு செய்தார்.


Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co operative Printing and Publishing Society Ltd.

Chief Editor:
S. V. G. Sowrirajulu

Honorary Editor:
N. Muthukumarasami.